உ

கடவுள் துணை.

ஸ்ரீ சாக்ஷாத் தில்லை நடராஜர் பேரில்

# பரத்துவ நிலைமை சாதனி.

இஃது,

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம் வடலூர் இராமலிங்கசுவாமிகள்

மாணவர்களிலொருவராகிய

திருவாசகப் பிரசங்கக் கல்விப்புலமை

சட்டாவதானம் வித்வான்

செய்யூர் கனகராயப்பிள்ளை குமாரர்

க-சபாபதிபிள்ளை அவர்களா லியற்றியதை

கம்பரா சிவரம் வீராசாமி நாயகர்குமாரன்

சித்திரப்படங்கள் யெழுதும் சோசியர்

க-வீ பொன்னுசாமி நாயகர் அவர்களால்


சென்னை சூளை

தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1913 [பை-3

இரண்டாம் பதிப்பு காபி-1000.

நெ. 71-விஜயவிக்கிநேஸ்வரர்கோவில்

தெருவு சூளை

உ

கடவுள் துணை.

திருச்சிற்றம்பலம்;

காப்பு

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஒருமாமுகனையொருமாவையூர்வாகனமாயுறநோக்கித்
திருமான்முதலோர்சிறுமையெலாந்தீர்த்தெம்பிறுகண்மணியாகிக்
கருமாலகற்றுங்கணபதியாங்கடவுளடியுங்களித்தவர்பின்
வருவாகருணைக்கடற்குமரவள்ளலடியும்வணங்குவாம்.





# ஸ்ரீ நடராஜர் துதி.

## கலி விருத்தம்.

---

திருச்சிற்றம்பலம்

கங்கைகொன்றை கனற்கண் குழவிவெண்
திங்கள்தங்குந் திருச்செனியும்விடம்
பொங்குங்கண்டமும் பொன்றிகழ்டாகத்தே
நங்கையுள்ளது நான்றொழுந்தெய்வமே

வன்னிமருலம்டமரகம் மான்மழு
மின்னும்மீன்கணோ டாமையோடொன்றரம்
மன்னும்மாலோடயன் மற்றபேர்க்குமா
நன்மையுள்ளது நான்றொழுந்தெய்வமே (2)

துன்றுமாத்தித் துலங்குமதிகலை
பன்றிக்கோடுடன் பல்சிலைதும்பைவேய்
குன்றென்றுள்ளது கோரினபேர்க்குமா
நன்றியுள்ளது நான்றொழுந்தெய்வமே. (3)

கோடிசித்தர் முப்பத்துமுக்கோடிபேர்
பாடிமாலயனண்டரானந்தக்கூத்
தாடியஞ்சலியத்தர்க ளாயகம்
நாடிபோற்றுவ நான்றொழுந்தெய்வமே (4)

காட்டுப்பாம்பும் புலியுங்கருநிறக்
கோட்டுப்பன்றியுங் கொம்பனையாள்நித்தம்
ஆட்டுக்காலின்மே லன்பைவளர்த்தியே
நாட்டிக்கொள்வது நான்றொழுந்தெய்வமே. (5)

வாதவூரடியாரொடு மூவர்க்குச்
சிதவார்செங் கமலத்திருவடிப்
போதிலுய்யப் பொருந்தவளித்தமா
நாதனுமவ;னான்றொழுந்தெய்வமே. (6)

அன்னவாகனத்தோ னண்டர்மாலொடு
மின்னும்வச்சிரத் தோனுமிறைஞ்சவே
என்னவேண்டுவ தாகிலுமீந்திடும்
நன்மையுள்ளது நான்றொழுந்தெய்வமே (7)

தேடித்தேடித் திகைத்துப்பித்தேறியே
பாடிப்பாடிப் பழுத்தவன்பத்தரைக்
கூடிக்கூடிக் கூத்தாடியவர்மனம்
நாடிக்கொள்வது நான்றொழுந்தெய்வமே (8)

படித்துப்பாச மகற்றிப்பணிந்தன்பாற்
பிடித்துழும்மலப் பேயகன்றோர்களைத்
துடித்துத்தூக்கிய பாதத்துணைவைத்து
ஒடித்துநிற்பது நான்றொழுந்தெய்வமே. (9)

காட்டங்கண்கன லாடிதிரிபுர
மூட்டும்வன்னி யார்மூரலாலொரு
மாட்டின்மீதினில் வந்தடியார்க்கரு
ளூட்டமுள்ளது நான்றொழுந்தெய்வமே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

இந்துதான்-காபி-தாளம்-ஆதி.

பல்லவி.

மங்கைமணாளா வந்தெனையாளா

அநுபல்லவி.

திங்கள்கங்கையணிந்த
சங்கரவேதசிங்க (மங்)

சரணங்கள்.

திரிசூலபாலா திரிநேத்ரசீலா
வரிப்புலித்தோலணிந்த
வரதாசுந்தரதாதா (மங்)

மான்மழுதோளா
மலைவில்லிவாளா
தான்சுமர்புரிசுர
காலாசுங்கரலோலா (மங்)

சயாபதிநேசா சர்வஜீவேசா
சபாசபையோர்கள்புகழ்
நாதாநன்னயப்பாதா (மங்)

இராகம்-நாதநாமகிரியை-தாளம்-சாப்பு.

பல்லவி.

பிரதிட்டமானார் பிக்ஷாடணார்

அநுபல்லவி.

எரிபட்டமதனைத்தந் தருள்சிததனெமதத்தன்
கரிகிட்டனயனும்பர் முரிபட்டயரும்நம்பர் (பிரதி)

சரணங்கள்.

புனலுங்கனலுமாடப் புலித்தோலரையிலாட
வனத்திலுறையும்வேழ மதகரித்தோலாட
பின்னியசடையாடப் பிறைதவழ்ந்தொளிந்தாட
வன்னமுடையசிங்க வரியுத்தரியமாட
டமரகமாட தத்திமிதாவென்
றமரர்கள்பாட, தித்திமிதீமென்
றதிருமத்தளம்போடத் துதிசெய்யடியார்பாட
இதுசமயமென்றெண்ணி விருடிகள்கூற்றாட
பிர்மவிஷ்ணுக்களாட தருமகோஷிகள்கூட
நிருபன்முதுகெலும்பு நெறநெறவெனஜாட (பிற)

தலைமாலையசைந்தாடத் தாவடங்களுமாட
மலைவில்லொளிர்ந்தாட வயனார்சிரமுமாடக்
கொலைபுரிமூவிலைச் சூலமுடுக்கையாட
பலபேர்கள்கொண்டாடும் பதக்கமுரத்திலாட
தண்டைகளாட கிண்கிணிசப்தம்
அண்டங்கொண்டாட எண்ணில்லாத
வமரரசுரராட வாகைவல்லாரிபாட
தமகுணவிருடிகள் சமமிலையெனவாட
குமரன்மயில்மேலாட குறத்திகுஞ்சரியாட
உமையம்பிகையுமாட வுலகிலுள்ளோராட
வேதபுராணமாட விருதுகொடிகளாட
மூதறிவுடையோர்கள் முன்னும்பின்னுமாயாட
பீதாம்பரமுமாட பின்னுங்கச்சைகளாட
நாதாந்தகனேயென்று நம்பும்நாதாக்களாட

சந்திரராட ஆரூரமர்ந்த
சுந்திரர்பாட நீறாறு நுதல்
ஞானசம்பந்தராட வானமந்திரராட
தேனும்பாருங்கலந்த திருநாவரசர்பாட
ஆனந்தமாம்வாத வூரர்வழக்கிட்டோட
நானென்றுமகமில் சபாபதிவாதாட (பிற)

மோடி ராகம்-புன்னுகவராளி-தாளம்-ஆதி.

பல்லவி.

பாதாரவிந்தமேதுணை
பற்பலமுனிவர்கள்ப்ணி
பாதாரவிந்தமேதுணை

ஆதாரம்நீயே யென்னுன்
சீதரர்கமலமலர்ப்
பாதாரவிந்தமன்றி
யோதாமுனிக்குகந்
தெமணையுதைத்தப் (பாதா)

முயலேமிதித்தபாதனே
மும்மலவினைதனைச்செற்ற
முயலேமிதித்தப்பாதனே
மயலார்மைவிழியார்கள்
செயலாய்மனமுழன்று
பயவார்வல்குற்றசையை
நயமாய்ந்ண்ணியநசை
தனையகற்ற (பாதா)

திருநேத்ரசூலபாணியே
சிவசங்கரஜெகமகிழ்
திரிநேத்ரசூலபாணியே
வரிமாப்புலிபுரித்துவொரு
மான்கரத்திரித்தித்
திரிலோகமுந்துதிக்க
மறுமானனுதினமுறைபடிதுதி (பாதா)

ஹ்ரீங்காரமோனவடிவே
ஸ்ரீகலசுபகரத்துய்ய
ஹ்ரீங்காரமோனவடிவே
ஓங்காரமாமெழுத்தைப்
பாங்காய்மனத்திருத்தி
யாங்காரமகற்றியே
தூங்காத்துயிர்கொளுஞ்
சபாபதிதுதி (பாதா)

இராகம்-பூரி-கலியாணி- அடதாளம்

பல்லவி.

என்னைக்கைசோரவிடமாட்டான் என்னப்பன்
இணையில்லாதஎன்னய்யன் திருவாலங்காட்டான் (என்)

பன்னும்புகழுடையார் பணியானைமுகன்வீரன்
பன்னிருகைவேலவன்மேல் வைத்தபக்ஷமறந்தாலும் (என்)

அண்டரண்டபகிரண்ட மிடிந்தாலுமதில்நிறைந்
துண்டானகிரகங்க ளுதிர்ந்தாலுவாழிகள்
ஒன்றாய்திரண்டுருண்டு யுலகத்தைமூடினாலும்
பெண்டாகியவுமைமேல் பிரியமதைவிட்டாலும் (என்)

மிதித்தமுயலகனை ஒழித்தாலுமுக்காலும
துதிக்கும்அடியார்களை பழித்தாலும்எண்டிசை
பதியிலுள்ளஆயன்மாலும் பலதேவர்கள்
கதிபெற்றரிஷிகள்மேல் கருத்தில்லாதிருந்தாலும் (என்)

மாரியில்லாமலுலகுலந்தாலும் மற்றபேர்கள்
வீரியங்கெட்டுதேகம்புலர்ந்தாலும்
செங்கோலதிகாரியவளார்படிகாப்பொன்னுவித்தாலும்
தீரமுடன்சபாபதிசொன்னதுஎண்ணியினி (என்)

திருச்சிற்றம்பலம்.

---

# அறிவிப்பு

இதனால் சகலமான கனவான்களுக்கு தெரிவிப்பது யென்ன வென்றால் சென்னை சிந்தாந்திரிப்பேட்டை சாமிநாய்க்கன்தெருவு 99-வது நெம்பர்வீட்டில் சித்திரபடம் எழுதும் சோசியர்

க வீ-பொன்னுசாமி நாயகர் அவர்களால்

நடக்கும்வேலைகள்.

ஸ்ரீசாக்ஷாத் தில்லைநடராஜர்பேரில் பறத்துவநிலமை சாதனி யென்னும் புஸ்தகம் விற்கப்படும். இதன் விலை அணா 2

ஸ்ரீலோககுரு சங்கராசாரிய சுவாமிகள் திருவாய்மலந்தருளிய நாதாந்த திரவுகோல் என்னும் புஸ்தகம் விற்கப்படும்.

இதன் விலை அணா 2

சோசியம் சொல்லப்படும்.

ஜாதகத்தைக்கொண்டு திசாபுத்திபலன்கள் எழுதப்படும்.

பலகையின்பேரில் உபுக்கெடுத்து தங்கரேக்குபோட்டு சாஸ்திர உத்தமாய் சகலமானபடங்கள் எழுதப்படும்

இரும்புபெட்டிகளுக்கு வர்னவேலைகள் பூர்த்தியாகச் செய்யப்படும்.

கோயில் வாகனங்களுக்கு வர்னவேலை செய்யப்படும்.

வீடுகளில் சுவரின்பேரில் சித்திரப்படங்கள் எழுதப்படும்.



இப்படிக்கு,

க வீ-பொன்னுசாமி நாயகர்.

கம்பராசிபுரம்.